ஜனசக்தி

சென்னை 16-10-1959

# நேர்மையற்ற தாக்குதல்

பிரதமர் நேரு விஜயவாடாவில் பேசினர். இந்திய-சீன எல்லை விவகாரம் குறித்துப் பேசுகையில் "சிலர் இது பற்றி பெரும் ஆவேசம் கொள்கிறார்கள். கத்தியையும் துப்பாக்கியையும் தூக்கிக் கொண்டு கிளர்ச்சி செய்யச் சொல்கிறார்கள். யுத்த விளிம்பில் நிற்கும் அறைகூவுகின்றனர். அறிவாளர்களின் வழி அதுவல்ல. எச் சமயத்திலும் ஆபத்து வந்தாலும் சமாளிக்கத் தயாராக இருப்பது என்பது சரி. அதே சமயத்தில் சமாதானமாகச் சமரசங்காணவே முயற்சி செய்ய வேண்டும்" என்றார்.

யாவரும் வரவேற்கத்தக்க கருத்துகள் இவை. இதை தான் கம்யூனிஸ்டுக் கட்சியும் வற்புறுத்துகிறது. சீனவுக்கு எதிராக போர் முழக்கம் செய், 'எல்லையோரத்தில் விமானங்கள் மூலம் குண்டுகள் போடு, கச்சை வரிந்து கட்டிக் கொண்டு கோதாவில் இறங்கு' என்று அசோக் மேத்தா, கிருபளானி கூட்டத்தாரும் அவர் போன்ற இன்னும் பலரும் முழங்குகிறார்களல்லவா? இவ்வாறெல்லாம் பேசுவது முறையல்ல, ஒழுங்கல்ல, சமாதானப் பேச்சுவார்த்தைகளுக்கு உதவி செய்யாது என்று இன்று பிரதமர் பேசுகிறார். அதேபோன்று கம்யூனிஸ்டுக் கட்சி கூறியது. இதில் தவறு என்ன? நேர்மையானவர்கள் கம்யூனிஸ்டுக் கட்சி கூறும் சமாதானப் பாதைதானே?

பிரதமர் நேரு மேற்கூறிய கருத்தைத் தெரிவித்தவுடன் நிற்கவில்லை மேலும் பேசினர். "நான் இது வரையில் கூறியவைஎனது அந்தக்கருத்துக் களின்வழி நிற்கக்கூடிய கட்சிகள் இருக்கின்றன. இந்தக் கருத்தோட்டத்திற்கு எதிரான போக்குடைய மற்ருெரு கட்சி இருக்கிறது அதுதான கம்யூனிஸ்டுக் கட்சி. அதனுடைய கருத்தோ நம்முடையகருத்திற்கு எதிரானது. நமது தேசத்தை மற்ற தேசங்கள் விமர்சனம் செய்தால், கண்டனம் செய்தால், தாக்கிளுல், அவர்களை நியாயப் படுத்துவதையே கொள்கையாகக் கொண்டுள்ள கட்சி. இத்தகைய போக்குடையதாக அது இருப்பதால்தான் அது தேசிய மனோபாவத்திற்கும் நேர்மை உள்ளம் கொண்ட இந்தியர்களுக்கும் எதிராகச் செல்கிறது. கம்யூனிஸ்டுக் கட்சியின் அடிப்படையான போக்கு என்ன வென்ருல் இந்த நாட்டில் மற்றவர்களுக்காக விளக்கு ஏற்றி வைப்பதுதான்" பிரதமர் நேரு அக். 13 பேச்சு.

பண்டித நேருவின் தாக்குதலில் நேர்மை இல்லை என்பது மட்டுமல்ல, புதுமை எதுவுமில்லை.

உலகமெங்குமுள்ள அத்தனை பிற்போக்காளரும் தங்கள் தங்கள் நாட்டுக் கம்யூனிஸ்டுகள் பற்றிச் செய்யும பிரச்சாரத்தைத்தான்பண்டித நேருவும் கூறுகிருர்.இந்தியச்சீன எல்லை விவகாரத்தை இவ்வளவு பெரிதுபடுத்துவதே இந்த நாட்டில் கம்யூனிஸ்டுகளைத் தாக்குவதற்காகவே என்பது அவரது பேச்சிலிருந்து தெளிவாகிறது.

ஹிட்லர் தன் நாட்டுக் கம்யூனிஸ்டுகளைத் தாக்கும்போது இதே விதமாகத்தான் பேசினன். சியாங்-கே-ஷேக் கம்யூனிஸ்டுகளைக் கொன்று குவித்தபோது இதே பிரச்சாரம் தான் செய்தான். மாஸ்கோவிற்காக சீனத்தில் விளக்கேற்றி வைப்பவர்கள் சீனக் கம்யூனிஸ்டுகள் என்ருன். அன்று ரஷ்ய நாட்டில் கம்யூனிஸ்டுகளை ஜார் சக்ரவர்த்தி கொலை செய்தபோது கம்யூனிஸ்டுகள் ரஷ்யாவின் பரம விரோதியான ஜெர்மனியில் தோன்றிய மார்க்சின், அதிலும் ஒரு யூதனின் கொள்கைக்கு, மேற்கத்திய நாட்டின், அன்னிய நாட்டின் தத்துவத்திற்கு இங்கு விளக்கேற்றுகிருர்கள என்று தான் குற்றம் சாட்டினன்.

இவ்வாறு குற்றம் சாட்டியவர்களெல்லாம் அதாவது கம்யூனிஸ்டுகள் விதேசிகள், தேசப் பற்றில்லாதவர்கள் எனக் குற்றம் சாட்டியவர்களெல்லாம் மண்ணோடு மண்ணாகினர். கம்யூனிஸ்டுகள் அந்த நாடுகளின் தலைசிறந்த தேசபக்தர்களாகத்திகழ்கிறார்கள். பண்டித நேரு மழுங்கிப் போனஅதே ஆயுதத்தை இந்த சமயத்தில் தீவிரமாக உபயோகிக்க முன்வந்திருக்கிருர் பரிதாபம்!

பிரதமர் நேருவிற்கு ஒரு கேள்வி! சீன மீது எல்லை விஷயத்தில் யுத்தம் தொடுக்க வேண்டுமென்று கம்யூனிஸ்டுகள் பறைசாற்றி கூறுகிருரா? சுமுகமாகப் பேசித் தீர்க்க வேண்டுமென்று தானே கூறுகிருர்? அதைத் தானே கம்யூனிஸ்டுக் கட்சியும் கூறுகிறது! பின் ஏன் கோபம்?

எல்லை விஷயங்களை சீனவுடன் சமரசமாகப் பேசித் தீர்க்க முடியாது என்று கூறுகிறீர்களா? உங்களது பேச்சுக்களில் அது பிரதிபலிக்கவே இல்லையே?

பல்லாயிரம் மைல்களுக்கப் பாலிருந்து அமெரிக்காவும் பிரிட்டனும் தன்னுடைய துருப்புகளைக் கொண்டுவந்து லெபனனிலும், ஜோர்டானிலும் இறக்கியது போன்ற ஏகாதிபத்திய ஆக்கிரமிப்பு நோக்குடன் சீன வருகிறது என்று கூறுகிறீர்களா? அவ்வாறு இதுவரை கூறவில்லையே?

சீன ஒரு சோஷலிஸ நாடு. அது பிறநாடுகளை ஆக்ரமிக்க வேண்டிய அவசியமே இல்லை. அதற்கான மூல காரணமே இல்லை. ஆத்திரப்பட வேண்டாம், அனுவசியமாக நட்புறவைக் கெடுக்க வேண்டாம் என்றுதானே கம்யூனிஸ்டுக் கட்சி கூறுகிறது. இவ்வாறு கருத்தறிவிப்பது தவறு என்று நீங்கள் சொல்ல முடியுமா? இவ்வாறு கூறுவது தேசபக்தியில்லாத போக்கு என்ருல் யுத்தத்தில் இறங்கு என்று கொக்கரிப்பதுதான் தேசபக்தியா?

பிற நாடுகள் நம்மை விமர்சனம் செய்யும்போது, நம்மைத் தாக்கும்போது அது நியாயம் என்று எந்த சமயத்தில் இந்திய கம்யூனிஸ்டுக் கட்சி கூறியது? பொய் பேசுவது ஏன்? நேர்மையற்ற தாக்குதல் ஏன் என்று கேட்கிருேம்?

இந்த நாட்டில் நீங்கள் கடைப்பிடிக்கும் ஜனவிரோத கொள்கையையும ஜனநாயக விரோதப் போக்கையும் மறைப்பதற்காகவே, இந்திய மக்களுக்குத் தெளிவான வழிகாட்டி அவர்களது பேராதரவைப் பெற்று வளர்ந்தோங்கிவரும் கம்யூனிஸ்டுக் கட்சியை மடக்கவும் இந்தச் சதி, திட்டமிட்டத் தாக்குதல் நடக்கிறது என்று கூறினல் தவரு?

இந்திய மக்கள் உண்மையை உணருவார்கள். உங்களது பொய்ப் பிரச்சாரங்களையும் சீக்கிரமே உணர்ந்து கொள்வார்கள். வெறியும் அரசியல் குரோதத்திலிருந்து எழும் பச்சைப் பொய்களும் வெற்றியடைய மாட்டா.

## காப்பி ஆராய்ச்சி நிலையம்

### நீலகிரியில் நிறுவப்படும்

சென்னை, அக். 14—

காப்பிச்செடி பற்றிய நவீன ஆராய்ச்சி நிலையம் ஒன்று நீலகிரி மாவட்டத்தில் விரைவில் நிறுவப்படும். இதற்காக 25 ஏக்கரா நிலம் ஒதுக்க சென்னை சர்க்கார் சம்மதித்துள்ளது.

காப்பி போர்டால் நிறுவப்படும் இந்த ஆராய்ச்சி நிலையம் அடுத்த ஆண்டு மத்தியில் வேலை தொடங்கும் என்று தெரிகிறது. இது சம்பந்தமாக காப்பி போர்டு தலைவர் திரு. . . . விஸ்வநாதன் முதலமைச்சர் திரு காமராஜை இன்று சந்தித்துப் பேசினர்.

# பண்டித நேருவின் அரசியல் வீழ்ச்சி!

**[வி. பி. சிந்தன்]**

இப்பொழுது பத்திரிகையாளர் மத்தியில் பேசுவதென்ருலே பண்டித நேருவுக்குக் கஷ்டமாக இருக்கிறது! பல்வேறு பிரதான பிரச்சினைகளில் இந்திய அரசாங்கமும், ஆளும் கட்சியும் எடுத்த நேர்மையற்ற நடவடிக்கைகளுக்கு நியாயம் கற்பிப்பதற்காக பண்டித நேரு உண்மையை திரித்துக் கூறுவது மட்டுமல்ல சில சமயங்களில் உண்மைக்கு மாறுன கருத்துக்களையே கூட வெளியிடுகிருர். காங்கிரஸ் கட்சியில் எவ்வளவுக் கெவ்வளவு நெருக்கடி நிலைமை ஏற்படுகிறதோ அவ்வளவுக் கவ்வளவு நேருவும் நேர்மையினின்றும் பாதை தவறிச் செல்லுகிருர்.

## தார்மீக வேடம் கலைகிறது!

அண்மையில் கேரள விஷயத்தில் நேரு கூறிய கருத்துக்களை வாசகர்கள் மறந்திருக்கமாட்டார்கள். "கேரளத்தில் மத்திய அரசாங்கத்தின் தலையீட்டை கம்யூனிஸ்டுகள் விரும்பினர்கள். இ. எம். எஸ் நம்பூதிரிபாடின் விருப்பமும் அதுவே" என்று கூறினர். தோழர் இ. எம். எஸ் நேருவின் கூற்றை மறுக்கவே, டில்லியில் தம்மைச் சந்தித்த பொழுது தோழர் ஏ. கே. கோபாலனும், அஜய் கோஷ் அவர்களும் அவ்வாறு கூறினர்கள் என்ருர். அவர்களும் மறுக்கவே "அவர்கள் என்னுடன் பேசிய உரையாடலிலிருந்து அத்தகைய எண்ணம் என் மனதில் எழுந்தது" என்று கூறினர்! நாயர் சேவா சங்கம் என்று வகுப்புவாத நிறுவனத்துடன் காங்கிரஸ் கூட்டுச் சேருவதை எப்படி அனுமதித்தீர்கள் என்று பிறிதொரு சமயம் கேட்டபொழுது "மன்னத் பத்மநாபன் அச்சங்கத்தைக் கலைத்து விட்டார். தற்பொழுது மன்னத் கல்வியில் சீர்திருத்தம் மட்டும்தான் வேண்டுகிருர்" என்று சமாதானம் கூறினர். இந்தச் சமாதானத்தையும் நேரு பின்னர் வெவ்வேறு விதமாகக் கூறவேண்டிய நிலைமை ஏற்பட்டது.

கடந்த சில ஆண்டுக் காலமாக காங்கிரஸ் கடைப்பிடித்து வருவதாக பாவனை காட்டிய தார்மீக வேஷம் வெகு வேகமாகக் கலைந்து வருவதையும், எல்லாவற்றிற்கும் மேலாக நமது தேசியத் தலைவர் நேருவின் தார்மீக வீழ்ச்சியையுமே இவைகள் சுட்டிக் காட்டுகின்றன. அண்மையில் கூட காங்கிரஸ் கட்சியின், குறிப்பாக நேருஜியின் இரட்டை நீதி நிலையை, இருவிதப் போக்கைப் பார்த்தோம். உண்மையை நேரு திரித்தும், பிரித்தும் கூற முற்பட்ட பொழுது அவரது வீழ்ச்சி இன்னும் வேகமாயிற்று.

### மண்ணைத் தூவும் முயற்சி

அண்மையில் புதுடில்லியில் நடைபெற்ற பத்திரிகையாளர் கூட்டமும், கேரளத்தில் கம்யூனிஸ்டுகளைத் தோற்கடிக்கவேண்டுமென்பதற்காக காங்கிரஸ்-லீக் உறவுபற்றி பூசி மெழுகி நேரு மறைக்கப் பார்த்ததும் காங்கிரஸ் கட்சியில் ஏற்பட்டுள்ள பிறிதொரு நெருக்கடியின் சிறந்த சான்ருகும். நேருவும் அவரது கட்சியும் உரத்த குரலில் வகுப்புவாத ஸ்தாபனங்களை எதிர்ப்பதாக வாயளவில் தெரிவித்திருக்கலாம். ஆனல் கேரள காங்கிரஸ்-லீக் உறவுபற்றி உண்மையிலேயே சில ஜனநாயக எண்ணம் படைத்த காங்கிரஸ்காரர்கள் அதிருப்தி கொண்டிருக்கிருர்கள். அவர்களில் சிலர் அண்மையில் நடைபெற்ற அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் எதிர்ப்பும் தெரிவித்திருக்கிருர்கள். ஆனல் கேரள சந்தர்ப்பவாதக் கூட்டுறவின் பிரதான பங்குதாரர் சாஸ்திரியார் "இந்திய அரசாங்கம் எல்லா வகுப்புவாத ஸ்தாபனங்களையும் தடை செய்ய உத்தேசித்திருக்கிறது. இதற்கு முஸ்லிம் லீக்கும் விதிவிலக்கல்ல" என்று கூறி அதிருப்தியடைந்த காங்கிரஸ் ஊழியர்களை திருப்திப்படுத்த முயன்றிருக்கிருர். கேரளத்தில் காங்கிரஸ் செய்துள்ள ஒப்பந்தம் முஸ்லிம் லீக் ஸ்தாபனத்துடன் அல்லவாம்! முஸ்லிம் மக்களுடன்தானும். காங்கிரஸ் ஊழியர்கள் கூட்டத்தில் பேசிய சாஸ்திரியார் இவ்வாறு கூறி, ஊழியர்களின் கவனத்தை வேறு திசைக்குத் திருப்பிவிட முனைகிருர். ஆனல் கேரளத்தின் சாஸ்திரியார் முஸ்லிம் லீக் தலைவர்களுடன் மணிக்கணக்கில் பேச்சு வார்த்தை நடத்தினரென்பதும் கம்யூனிஸ்டுகளை தேர்தலில் தோற்கடிக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் ஒரு உடன்பாட்டில் கையெழுத்திட்டார்கள் என்பதும் ஊரறிந்த ரகசியமாகும். சாஸ்திரியாரோடு பேச்சு வார்த்தை நடத்திய முகம்மது கோயாவும், சிதி சாஹிபும், பவாக்கி தங்கலும் தான் முஸ்லிம் மக்களின் பிரதிநிதிகளா? மற்றவர்களை விட்டுவிட்டால் கூட தேசிய முஸ்லீம்கள் இல்லையா? அவர்களுக்கும் இவர்கள் தான் பிரதிநிதிகளா? கேரள முஸ்லீம் லீக்கோடு சந்தர்ப்பவாதக் கூட்டணியில் கையொப்பமிட்டு விட்டு, இன்று அக்கட்சியையெல்லாம் தடை செய்யப் போகிருேம் என்று பேசுவது கபட நாடகமில்லையா? அல்லது மக்களின் கண்களில் மண்ணைத் தூவும் முயற்சியல்லவா?

### எவருடனும் கூட்டு!

முஸ்லிம் லீக் ஊக்குவிக்கப்படக் கூடாது என்று நேருஜி தமது அறிக்கையில் உறுதியாகக் கூறினர். ஆனல் பல்வேறு மாநிலங்களிலும் முஸ்லிம் லீக் புத்துயிர் பெறுவதற்காக என்னென்ன முயற்சிகள் செய்யப்பட்டுள்ளன என்ற பட்டியலையே சமீபத்தில் லீக் தலைவர் இஸ்மாயில் சாஹிப் வெளியிட்டுள்ளார். கம்யூனிஸ்டுகளைத் தோற்கடிக்க வேண்டுமென்ற பேராசையால் காங்கிரஸ் யாருடனும் கூட்டுச் சேரத் துடிக்கிறது. அதனுடைய பிரதிபலிப்புக்கள் என்னவாக இருக்கும் என்பதைப் பற்றியும் காங்கிரஸ் கவலைப்படவில்லை அந்தோ! பரிதாபம்!

### நேருவிற்கு அழகல்ல!

கேரள காங்கிரஸ்-லீக் உறவை நியாயப்படுத்த நேரு இரண்டு சமாதானம் கூறுகிருர். முஸ்லிம் லீக் காங்கிரசின் திட்டத்தை ஒத்துக்கொண்டுவிட்டது என்று கூறுகிருர். இவ்வாறு கூறுவது அப்பட்டமான மற்ருெரு பச்சைப் பொய்யாகும். இதுவரை எந்த லீக் தலைவரும் காங்கிரசின் திட்டத்தை ஒத்துக் கொண்டதாகக் கூறியதில்லை. ஆனல் அதற்கு மாருக கேரள முஸ்லீம் லீக் காங்கிரசின் நாகபுரித் தீர்மானத்திற்கு விரோதமாக அணி திரட்டிக் கொண்டிருக்கிறது இன்றல்ல, தீர்மானம் நிறைவேறிய நாளிலிருந்தே அம்முயற்சியில் ஈடுபட்டுள்ளது. சமீபத்தில் நடைபெற்ற கேரள முஸ்லீம் லீக் மாநாட்டில் காங்கிரசின் கொள்கையையும், காங்கிரஸ் அரசாங்கத்தின் கொள்கையையும் காரசாரமாகத் தாக்கிப் பேசினர்கள். உண்மை இவ்வாறிருக்க, முஸ்லீம் லீக் காங்கிரசின் திட்டத்தை ஒத்துக் கொண்டு விட்டது என்று நேருஜிக்கு எங்கிருந்து இச்செய்தி கிடைத்ததோ நமக்குத் தெரியாது. முஸ்லீம் லீக்கின் தொடர்ச்சியான நடவடிக்கைகளை நேருஜிக்குத் தெரியாது என்பதை நம்மால் நம்பமுடியவில்லை. உண்மையில் கடந்த பொதுத் தேர்தலின் போது லீக்கிற்கு எதிராக நேரு முழங்கினர் ஆனல் இன்று கம்யூனிஸ்டுகள் வெற்றி பெறக்கூடாதே யென்ற ஆத்திரத்தில் நேரு மிக மிகப் பிற்போக்குவாதிகள், பச்சை வகுப்புவாதிகளின் உதவியை நாடுகிருர். அதற்கு மீண்டும் உண்மையைத் திரித்துக் கூறி நியாயம் கற்பிக்க முயல்கிருர்.

இரண்டாவதாக இன்றுள்ள கேரள முஸ்லீம் லீக் பழைய முஸ்லீம் லீக்கைப் போன்ற ஸ்தாபனமல்ல என்று நேரு கூறுகிருர். ஆனல் அதற்கு ஒரு உதாரணம் கூட நேரு கூறவில்லை. கேரளத்தில் இன்றுள்ள முஸ்லீம் லீக் பழைய லீக்கைப் போன்றதுதான் என்பது எல்லோருக்கும் தெரியும்.

முஸ்லீம் லீக் காங்கிரசின் திட்டத்தை ஒத்துக் கொண்டிராவிட்டால் அவர்களோடு பேசியிருக்கவே மாட்டோம் என்று நேரு பத்திரிகையாளர் மத்தியில் கூறினர். கம்யூனிஸ்டுகளுக்கு எதிராக விழும் வாக்குகள் சிதறி, கம்யூனிஸ்டுகள் வெற்றி பெறுவதற்கு வாய்ப்பு ஏற்பட்டுவிடுமென்று கருதி, இப்பொழுது கேரள காங்கிரஸ் தலைவர்களில் சிலர் ஜனசங்கத்தோடு உடன்பாடு செய்து கொள்ள முயலுகிருர்கள், அதற்கு நேருவும், திருமதி இந்திரா காந்தி அம்மையாரும் ஆதரவாக இருப்பதாகக்கூட 'நேஷனல் ஹெரால்டு' என்ற ஏடும், பிற பத்திரிகைகளும் கூறுகின்றன, இதுதான் கம்யூனிசத்திற்கெதிராக அவர்கள் நடத்தும் தேசிய பரிசுத்தப் போராட்டம்! கம்யூனிஸ்டுகளை எதிர்ப்பதற்கு எந்த வழியையும் மேற்கொள்ளலாம், எத்தகையவர்களுடனும் சேர்ந்து நிற்கலாம்' என்பது தெளிவாகிவிட்டது. ஆனல் இப்போக்கு நமது ஜனநாயக வாழ்வில் நஞ்சைக் கலக்கும் என்பதில் சந்தேகமில்லை ஏற்கனவே நேருஜியின் ஆசிர்வாதத்தோடு கேரள பிற்போக்குவாதிகள் நடத்திய கிளர்ச்சி எதைக் குறிக்கிறது? தேர்தல் முடிவுகள் தங்களுக்கு சாதகமாக இராவிட்டால் அம்முடிவிற்கு மதிப்பளிக்கமாட்டார்கள் என்பதைத்தான் காட்டுகிறது. இங்ஙனம் பாரதம் விடுதலை பெற்ற பன்னிரண்டு ஆண்டுகளுக்குப் பின்னர் அரசியல் சட்டத்தின் ஜனநாயக உள்ளடக்கம் கேரளத்தில் குழி தோண்டி புதைக்கப்பட்டுவிட்டது. பாம்பிற்குப் பாலூற்றி வளர்த்துப் பாதுகாப்பதால் வரும் அபாயத்தை சரித்திரம் நேருஜிக்குக் காண்பிக்கும். இருண்ட வகுப்புவாத சக்திகளுக்கு ஒரு முறை இடம் கொடுத்தால் வேரூன்றிக் கொள்ளும். இது கம்யூனிஸ்டுகளுக்கு மாத்திரமல்ல, பாடுபட்டுப் பெற்ற ஜனநாயக முறைக்கே பெரும் தீங்கு விளைவிக்கும் இதனை பண்டிட்ஜியும், இதர காங்கிரஸ் தலைவர்களும் உணர வேண்டும். ஜனநாயக எண்ணம் படைத்தவர்களும், இந்திய சுதந்திரத்தைக் காப்பாற்ற வேண்டும் என்ற நன்நோக்கம் படைத்தவர்களும் அவர்களுக்கு உணர்த்த வேண்டும்.

# தோட்டத் தொழிலாளர்களுக்கு தீபாவளி போனஸ் தருக

## படி அரிசி 12 அணுவுக்குத் தருக

### வால்பாறை தோட்டத் தொழிலாளர் சங்கங்களின் கோரிக்கைகள்

வால்பாறை, அக். 13—

தோட்ட முதலாளிகள் தீபாவளிக்குப் போனசு கொடுக்க வேண்டுமென்று கோரியும், மற்றும் பல்வேறு கோரிக்கைகளை முன்வைத்து வால்பாறை தமிழ்நாடு தோட்டத் தொழிலாளர் சங்கமும், தென்னிந்திய தோட்டத் தொழிலாளர் சங்கமும் கூட்டாக ஒரு கோரிக்கை மகஜர் அனுப்பியுள்ளன.

அம் மகஜரில் அவர்கள் தோட்ட மானேஜர்களிடம் கோரியிருக்கின்ற கோரிக்கைகளாவன:

அரிசி: தோட்டத் தொழிலாளிகளுக்கு எஸ்டேட்டில் சென்னை ஒப்பந்தம் ஏற்பட்ட காலத்தில் கொடுக்கப்பட்டது போல் பட்டணம் படி ரூ 0-12-0 விலைக்கு விநியோகிக்கப்பட வேண்டும். குடும்பத்தில் அண்டி வாழ்பவர்களுக்கும் எஸ்டேட்டுகளிலேயே கொடுக்கப்பட வேண்டும்.

1959-வது வருஷத்திற்கு தொழிலாளிகளுக்குக் கொடுக்கப்படவிருக்கும் போனஸில் தீபாவளி அட்வான்ஸாக தலா ரூபாய் 30-0-0 வீதம் கொடுக்கப்பட வேண்டும்.

கொழுந்துக் காசு: தற்சமயம் ஆனைமலையில் கொடுக்கப்பட்டு வரும் . . . கொழுந்துக்காக மற்றப் பிரதேசங்களில் கொடுக்கப்படுவதைவிட மிகவும் குறைவானது. அசாமில் கொடுக்கப்பட்டு வருவதுபோல் ராத்தலுக்கு ஒரு அணு வீதம் கொடுக்கப்பட வேண்டும்.

கடந்த காலத்தில் தேயிலைத் தோட்டங்களில் வேலைக்கு வைத்துவந்துள்ள துபடியும், முதலாளிகளே தொழிற்கோர்ட்டார் முன்னிலையில் ஒத்துக் கொண்டுள்ள அபடியும், தேயிலைத் தோட்டங்களில் ஏக்கருக்கு $1\frac{1}{2}$ ஆளும், காப்பித் தோட்டங்களில் 10 ஏக்கருக்கு 9 ஆளுமாக தொழிலாளிகள் நிரந்தரமாய் பதியப்பட வேண்டும்.

தற்சமயம் தோட்டத் தொழிலாளர்களுக்கு நிர்ணயிக்கப்பட்டிருக்கும் கூலி விகிதமான 15-வது தொழிலாளர் மகாநாட்டில் ஏற்றுக் கொண்டுள்ள முடிவுபடி இல்லை மேற்கண்ட அடிப்படையில் திருத்தி அமைக்கப்பட்டு ஒரு தொழிலாளியின் சம்பளம் 3 பேர் கொண்ட ஒரு குடும்பத்தைப் பராமரிக்கப் போதுமானதாக ஆக்கப்பட வேண்டும்.

தோட்டத் தொழிலில் உள்ள விசித்திர நிலைமைகளை கணக்கில் எடுத்து தொழிலாளிகளுக்கு ராஜுடி கொடுக்கும் போது அவர்களுடைய சர்வீஸ் காலம் முழுவதற்கும் ராஜுடி கொடுக்கப்பட வேண்டும்.

சிக்கு லீவாக தொழிலாளிகளுக்கு 1 மாத காலமும், சிக்கு அலவன்ஸாக அவர்களின் 2/3 பங்கு வருமானமும் அதாவது ஆண்களுக்கு ரூ 1-5-0-ம், பெண்களுக்கு ரூ 0-14-0-ம் கொடுக்கப்பட வேண்டும்.

பிரசவ சகாய நிதிக்கு 5/7 பங்கு வருமானம் சந்தேறக் குறைய ரூ. 1-0-0 வீதம் ரூ. 74-00 கேரள ராஜ்யத்தில் கொடுக்கப்படுவது போல் இங்கும் கொடுக்கப்பட வேண்டும்.

தோட்டத் தொழிலாளிகளுக்கு வேலைப்பளுவும், அவர்களின் வேலைத்தரமும் நிர்ணயிக்கப்பட வேண்டும்.

## அறுவடைக் கூலி ஒப்பந்தம்

தஞ்சை, அக். 7—

தஞ்சாவூர் வையாச்சேரி வட்டார விவசாயக் கூலிகள் பிரதிநிதிகளுக்கும், மிராசுதார் பிரதிநிதிகளுக்கும் தஞ்சை போலீஸ் டிப்டி சூப்பிரண்ட், பாபநாசம் சர்க்கிள் இன்ஸ்பெக்டர், ஐயம்பேட்டை போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் ஆகியவர்கள் முன்னிலையில் கீழ்க்கண்ட ஒப்பந்தம் ஏற்பட்டது:

குறுவை அறுவடைக்குக் கூலி ஆளுக்கு $3\frac{1}{2}$ மரக்கால், ஏர் உழவுக் கூலி ஆளுக்கு $3\frac{1}{2}$ மரக்கால். வேலை செய்யும் ஆளுக்குக் கூலி $3\frac{1}{2}$ மரக்கால். நடவு ஆள் கூலி $1\frac{1}{2}$ மரக்கால், சம்பா அறுவடைக்கு விழுத கூலி காலத்துக்கு 1 மரக்கால் குறுவை. பேரச் சம்பா. நடவாள் கூலி $1\frac{1}{2}$ மரக்கால். வேலைசெய்யும் கூலி ஆளுக்கு 2 மரக்கால்.

# தீபாவளிக்கு முன் சர்க்கரைப் பஞ்சம் தீருமா?

## தீரும் என்று மந்திரி நம்பிக்கை

### ஜில்லா கலெக்டர்கள் விநியோக பொறுப்பை ஏற்க யோசனை

சென்னை, அக். 14—

தீபாவளிக்குள் சர்க்கரை பஞ்சம் "நிரலாம்" என்று உணவு மந்திரி திரு. பக்தவத்சலம் நம்பிக்கை தெரிவித்தார்.

பத்திரிகை நிருபர்களிடம் பேசுகையில் வட இந்தியாவிலிருந்து எப்படியாவது இரண்டாயிரம் டன்கள் சர்க்கரை தருவிக்க முயற்சி நடப்பதாகவும், இது வெற்றிபெற்ருல் இந்த மாதம் தேவைப்படும் பத்தாயிரம் டன்களும் பெற்றுவிட முடியும் என்றும் மந்திரி கூறினர்.

### விநியோகம்

விநியோக முறையில் ஊழல் இருப்பதுதான் சர்க்கரை பஞ்சம் ஏற்படக் காரணம் என்பதை மந்திரி ஒப்புக்கொண்டார்.

தென்னிந்திய சர்க்கரை முதலாளிகள் சங்கமும், பாரி குரூப் கம்பெனிகளும் சர்க்கரை விநியோகத்தை மேற்பார்வையிடும் பொறுப்பை ஜில்லா கலெக்டர்களிடம் விட்டுவிடத் தயாராக இருப்பதாக அறிவித்துள்ளனவாம்.

சென்னை நகரில் டி. யு. சி. எஸ். செங்கற்பட்டு ஜில்லா கூட்டுறவு சப்ளை சங்கம மூலமாக சர்க்கரை விநியோகம் நடப்பதை சர்க்கார் அங்கீகரித்திருப்பதாக மந்திரி கூறினர்.

குறிப்பாக பாரி கம்பெனியார் சர்க்கரை விநியோகம் செய்யும் சில்லரை வியாபாரிகளின் பட்டியலை பிரசுரம் செய்ய சம்மதித்துவிட்டதாகவும், சரியாக நடக்காத வியாபாரிகளை நீக்க ஜில்லா கலெக்டர்களே உத்தரவிடலாம் என்று அவர்கள் கருதுவதாகவும் மந்திரி கூறினர்.

செங்கற்பட்டு தென்னுற்காடு, வடஆற்காடு, நீலகிரி கன்யாகுமரிமாவட்டங்களில் கலெக்டர்களே சில்லரை விற்பனையாளருக்கு சர்க்கரை விநியோகம் செய்யும் பொறுப்பை ஏற்கலாம் என்று பாரி குரூப் நிர்வாகம் யோசனை கூறியிருப்பதாக மந்திரி கூறினர். இதர ஜில்லாக்களிலும் கூட்டுறவுச் சங்கங்கள் மூலமாக சர்க்கரை விநியோகம் செய்யும் யோசனை இருந்து வருவதாகவும் மந்திரி கூறினர்.

## த.நா.தொழிற்சங்கக் காங்கிரஸ்

### நிர்வாகக் கமிட்டிக் கூட்டம்

21-10-59 காலை 9 மணிக்கு திருச்சி முனிசிபல் சத்திரத்தில் நடைபெறும். அவ்வமயம் கீழ்க்கண்ட விஷயங்கள் விவாதத்துக்கு எடுத்துக்கொள்ளப்படும். (1) ஏ. ஐ. டி. யு. சி. கட்டிட நிதி இயக்கம், (2) உணவு நிலைமையும், நமது கடமையும் (3) ஜில்லா ரீதியில் தொழிற்சங்க ஸ்தாபனம், எல்லா நிர்வாகக் கமிட்டி அங்கத்தினர்களும் தவருது கலந்து கொள்ளும்படி கோருகிறேன்.

சென்னை 14-10-59 | T.R. கணேசன் காரியதரிசி

# ஆசிரியருக்குக் கடிதங்கள்

## ஆரணி நகரசபை கவனத்திற்கும் மந்திரி திரு. மாணிக்கவேலர் கவனத்திற்கும்

ஐயா,

தமிழ்நாட்டிலுள்ள 64 நகரசபைகளில் வடஆற்காடு மாவட்டத்திலுள்ள 8 நகரசபைகளில் ஆரணி நகரசபை ஒன்ருகும்.

இந்நகரசபையின் இன்றைய ஜனத்தொகை 28 500.

இந் நகரசபையின் கீழுள்ள நகரசுத்தித் தொழிலாளர்களின் சம்பளம் படுமோசம். மாதச் சம்பளம் ரூ. 12-50 பஞ்சப்படி ரூ 35 வீட்டு அலவன்ஸ் ரூ 3 ஆக ரூ. 50.50 வருமானம் பெற்று வருகிருர்கள்.

தொழில் வரி, ரூ 50க்குமேல் மாத வருமானமுள்ளவர்கட்கு 6 மாதத்திற்கு ரூ. 1 என்று இந் நகரசபையில் வசூலிக்கப்படுவதற்கு மக்கள் மத்தியில் பெரும் அதிருப்தி இருக்கிறது

குறைந்த வருமானமுள்ளவர்களான இந் நகரசபையின் நகரசுத்தித் தொழிலாளர்களிடமிருந்து ரூ 1 தொழில் வரி வசூலிக்கப்படுவதற்குப் பெரும எதிர்ப்பு நகரசுத்தித் தொழிலாளர் மத்தியில் இருக்கிறது.

இந் நகரசுத்தித் தொழிலாளர் தினசரி காலை 5-30 மணிக்கு வேலைக்கு வரவேண்டும். பிற்பகலிலும் வேலைக்கு வரவேண்டும்.

இந்த தொழிலாளர்களைக் கசக்கிப் பிழிந்து வேலை வாங்குகிருர்கள்.

சில நிமிஷங்கள் தாமதித்து வந்தாலும், ஆப்செண்டு போட்டு முழுநாள் சம்பளப் பிடித்தம் செய்யப்படுகிறது.

சானிடரி இன்ஸ்பெக்டர் திரு. சேதுராமன், கமிஷனர் ஜோசப் முன் இத்தொழிலாளர்கள் ஸ்தாபன ரீதியாகத் திரண்டு தெரிவிக்கும் நியாயமான கோரிக்கைகள் உதாசினம் செய்யப்படுகின்றன.

இத்தொழிலாளர் பலர் $2\frac{1}{2}$ வருடம், 3 வருடங்களாக வேலை செய்தும், டெம்பரரியாகவே இருப்பது எந்த தொழிற் சட்டத்திற்கும் மீறிய அநீதியாகும்!

கக்கூஸ் வண்டி ஓட்டும் வேலை, மூத்திரவண்டி ஓட்டும் வேலை, நகரசுத்தி வேலை இப்படி வேலைப் பிரிவினை செய்து, தொழிலாளர்களுக்கு வேலை கொடுக்காமல் தொழிலாளிகளை எல்லா வேலைகளையும் மாற்றி மாற்றி செய்யும்படி தெரிவிக்கப்படுவதால், தொழிலாளர்கள் திருப்தியாக எந்த வேலையும் சுத்தமாகச் செய்ய முடியாதிருப்பதை. நிர்வாகிகள் கவனத்திற்குக் கொண்டுவந்தும் பலனளிக்கவில்லை.

ஜனநாயகத்தைப்பற்றி வாய் நிறையப் பேசும் காங்கிரஸ்வாதிகள் நிர்வாகத்திலுள்ள இந்நகரசபை, தொழிலாளர் நலன்களைப் புறக்கணிப்பது அநீதியாகும்.

பொதுமக்கள் சுகாதாரம் இந் நகரசபையின் சரிவர கவனிக்கப்படுவதில்லை.

ஆறு நகரசுத்தித் தொழிலாளர் மாத்திரம் கமிஷனர், சானிடரி இன்ஸ்பெக்டர் இப்படி உத்தியோகஸ்தர்களின் வீட்டு வேலைகளைச்செய்ய வேண்டியிருப்பதால், மற்ற தொழிலாளர்கள் வழக்கமாக இந்த அறுவர் செய்யவேண்டிய நகரசுத்தி வேலைகளைக் கவனிக்க வேண்டிய நிலைமை நீடிக்கிறது

நகரசுத்தி தொழிலாளர் உறவினருக்கு, இந்நகரசபையில் வேலை காலியானல் கொடுக்க வேண்டுமென்ற ஏற்பாட்டை நியதியைக்கூட கவனிப்பதில்லை.

ஷெட்யூல்ட் வகுப்பினருக்கு தாராளமாகவும் ஏராளமாகவும் வசதிகளைப்பெருக்கிக்கொண்டே போவதாக அரிஜன மந்திரி திரு. கக்கன் திருநாள் பேசுகிருர். ஆனல் இந்நகரசபையிலுள்ள தொழிலாளர்களான ஷெட்யூல்டு வகுப்பினர் ஒருவருக்குக்கூட வீடு கட்டிக் கொடுக்கப்படவில்லை

நவ இந்தியா, தினமணி, தினத்தந்தி முதலிய பத்திரிகைகள் முனிசிபல் வாசக சாலைகளில் உள்ளன. ஜனசக்தி முதலிய பத்திரிகைகளையும் வாங்கிப்போடுமாறு தெரிவிப்பதை, கமிஷனர் கவனிப்பதே இல்லை.

இந்நகர சபை சுகாதாரத்தைச் சரிவர கவனிக்காததன் காரணமாக, ஈக்கள், கொசுக்கள் பெருகிக்கொண்டே வருவதால் முதிராச் சாவு அதிகமுள்ளது. மொத்தம் இறப்போரில் 5 வயதிற்குள் இறக்கும் குழந்தைகள் எண்ணிக்கை 50 சதமாகும்.

இந்த மாவட்டத்திலிருந்து வந்தவர்தான் சுகாதார மந்திரி திரு. மாணிக்கவேலர்.

இந்நகர சபைக்கு 3-வது 5 ஆண்டு திட்டத்திலாவது கணிசமான தொகை மானியம் கிடைக்குமாறு மந்திரி திரு. மாணிக்கவேலர் செய்து குழந்தைகளையும், நகர மக்களையும் காப்பாற்றுவது மிக மிக அவசியம், மிக மிக அவசரமாகும்.

—கே. முருகேசன்.
சென்னை ஜில்லா காரியதரிசி,
இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி.

## நியாயவிலைகடையா?

ஐயா,

சர்க்காரால் திறக்கப்பட்ட நியாய விலைக்கடைகளில் நியாயமான குறைந்த விலை பக்கா அரிசி 0-12-0 அணுவிற்கு கிடைக்கிறதா என்ருல் இல்லை: அதிக விலைக்குத்தான் நல்ல அரிசி கிடைக்கிறதா என்ருல் அதுவும் இல்லை எப்படியோ புழுங்கலரிசி கிடைக்கிறதா என்ருல் அதுவும் இல்லை. பின் எதற்கு நியாயவிலைக் கடை? யாருமே வாங்காத அரிசி ஒரு ரகம் உண்டு. அதன் விலை ரூ 1-0-3 இதை யாரும் வாங்குவதில்லை. உதாரணமாக 10 மூட்டை அரிசிகள் போதவில்லை என்று ஜனங்கள் சொல்லிவந்த இடத்தில இந்த மோசமான அரிசி 7, அல்லது 8 பக்காக்கள்தான் விற்கின்றனவாம். மோசமான பச்சரி இந்த விலைக்கு விற்கவில்லை. அதனல் உடனே வேறு அரிசி அனுப்புங்கள் என்று சொல்லி 10 நாட்கள் சென்ற பின்பும்கூட அரிசி நியாயவிலைக் கடைக்கு வரவில்லை, சர்க்கார் என்ன செய்கிறது. இந்த நிலைமை எல்லா கடைகளிலுமே இருக்கும் என்று தான் கருதுகிறேன். மக்களுக்கு மிக மிக அவசியம் உணவு. இவ் விஷயத்தில் சர்க்கார் (ஆகட்டும், பார்க்கலாம்) என்ற பாணியில் செல்லும் வேண்டாம் இந்த சர்க்கார் என்று மக்கள் கூற அதிக நேரமாகாது என்பதை சர்க்கார் உடனடியாக உணர்ந்து ஆவன செய்ய வேண்டும்.

பி. ராமலிங்கம்,
காரியதரிசி
கம்யூனிஸ்ட் கட்சி
பெத்தநாயக்கன்பாளையம்

## சைதை சுகாதாரம்—அரசாங்கம் கவனிக்குமா?

ஐயா,

98-வது வட்டத்தில் குஷ்ட ரோக ஆஸ்பத்திரி இருப்பதால் மக்களுக்கு எண்ணற்ற கஷ்டங்கள் ஏற்படுகின்றன. ஆகலால் தூரமான இடத்திற்கு அவ்வாஸ்பத்திரியை மாற்றும்படியாகக் கேட்டுக் கொள்கிருேம்.

மேலும் இவ்வட்டத்திலுள்ள பிரசவ விடுதியில் தொழிலாளர் குடும்பத்தைச் சேர்ந்த தாய்மார்கள் பிரசவத்திற்காக அனுமதிக்கப்படுகையில "ஏன் குழந்தைகளைப் பெற்றுக் கொள்கிருய்" என்று கேட்கப்படுவதாகத் தாய்மார்கள்தெரிவிக்கிருர்கள். உடனடியாக அரசாங்கம் தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும்.

இவ்வட்டத்தில் போதுமான கக்கூஸ்கள் இல்லாததால மக்கள் வெளியிடங்களில் மலஜலம் கழிக்க நேரிடுகிறது. ஆகலால் நகர மன்றம் அதிக கக்கூஸ் வசதிகள் செய்துதரவேண்டும்.

ஒரு சைதைவாசி.

## கேரள பொதுத் தேர்தல்

### பிரசாரத்திற்கு நேரு செல்லமாட்டாராம்

சென்னை, அக். 14—

கேரளத்தில் பொதுத் தேர்தலுக்காகப் பிரசாரம் நடக்கும் போது பிரதமர் நேரு கேரளத்திற்குச் செல்லமாட்டார்.

இன்று மாலை சென்னை விமான நிலயத்தில் பிரதமர் நேரு திருமதி அம்மு சுவாமிநாதனிடம் பேசிக்கொண்டிருக்கையில் மேலே கண்டவாறு தெரிவித்தார். இத்தகவலை திருமதி சுவாமிநாதன் செய்தி நிருபர்களுக்கு வெளியிட்டார்.

# விளைந்த நெல் பதுங்குகிறது; விலைவாசி ஏறிக்கொண்டே இருக்கிறது